உ

குருவே துணை

வண்ணச்சரபம்

அருள்மிகு தண்டபாணி சுவாமிகள் அருளிய

# அருளாட்சி



திருவாமாத்தூர்

தவத்திரு. முருகதாச சுவாமிகள்

முத்துவிழா மலர்

1986

உ

குருவே துணை



# அருளாட்சி

நூலாசிரியர்

வண்ணச்சரபம்

திருப்புகழ்ச்சுவாமிகள், முருகதாச சுவாமிகள்

எனவழங்கும்

அருள்மிகு தண்டபாணி சுவாமிகள்

திருவாமாத்தூர்

நூலாசிரியர் பெயரரும்

திருவாமாத்தூர், பழனி கௌமாரமடங்களின் தலைவருமான

தவத்திரு முருகதாச சுவாமிகள்

முத்துவிழா மலர்.

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின்

பதிப்புநிதி கொண்டு

இந்நூல் பதிப்பித்து வெளியிடப் பெறுகிறது.

**24—4—1986**

# முன்னுரை

நூற்பெயரமைப்பு:- அருளாட்சி என்ற இந்நூல் வண்ணச்சரபம் அருள்மிகு தண்டபாணி சுவாமிகள் அருளிய நூல்கள் பலவற்றுள் ஒன்றாகும். சீவகருணைத்திறனை வளர்த்த திருவள்ளுவர் முதல் வந்த அருளாளர் திருக்கூட்டத்தில் வாழையடி வாழையென வந்த பல்லோருள் இந்நூலாசிரியரும் ஒருவராவர். இந்நூலிடத்து தமிழ் மறையாம் திருக்குறட்கருத்துகளைப் போற்றியும் கொலை செய்து யாகம் செய்யும் வேதக்கருத்துகளை மறுத்துரைத்தும் விளங்குகிறது என்பதை இந்நூலின் பெயர் கொண்டே உணரலாம். கடவுள் பெய -ராலும் உணவின்பெயராலும் சீவவதை செய்வதை அறவே வெறுத்துரைப்பவர் நூலாசிரியர். இக்கருத்தைப்பல நூலுள் பல விடத்தும் கூறினரேனும் அதற்கெனத்தனிநூல் செய்பவர் போல் இந்நூலை அருளியுள்ளார் அருள்மிகு தண்டபாணிசுவாமிகள்

நூலாசிரியர்:- தென்பாண்டித்திருநெல்வேலியில் 1839 ல் தோன்றியவர் இளமையிற்சங்கரலிங்கம் என்ற பெற்றோரிட்ட பெயரினாகிய இந்நூலாசிரியர், பிற்காலத்தில் பலவிதப்பெயரைத் தாங்கினரெனினும் வண்ணச்சரபம், திருப்புகழ்ச்சுவாமிகள், முருக தாசசுவாமிகள் எனவழங்கும்தண்டபாணிசுவாமிகள் என்பதனையே பலரும் அறிவர். இளமை முதல் வேல்வழிபாடு, ஆறெழுத்தருமறை உருவேற்றுதலில் சிறந்திருந்தார். இதன்பயனாக இளமைமுதல்தேனி னும் இனியசெந்தமிழ்க்கவிகள்இயற்றலானார். இலட்சம் பாடல்களை இயற்றியதோடு அவற்றைத்தாமே பனையோலைச்சுவடியில் எழுதலா னார். இறைமீது கொண்ட ஊடல்காரணமாக தமதுபல்வேறுஏட்டுச் சுவடியின் நூல்களைத்தாமே சிதைத்தார். அவ்விதமாக அழிந்தவை போக 54. ஆயிரம்பாடல்கட்கு மேலாக இன்றுமுள்ளது,

சாத்திர தோத்திர. வரலாறு. இலக்கணம், நாடகம் என்பன போன்ற துறையில் இந்நூல்கள் அமைந்துள்ளன இளமைமுதல் தவ வழிபாட்டை மேற்கொண்டார். 1898 திருவாமாத்தூரில் ஞான சமாதி கொண்டார் ஆங்காங்குள்ள கடவுள் மீது சமயவேறுபாடு கருதாமல்பல்வேறு நூல்களை இயற்றினர். அறுவகையிலக்கண புலவர்

புராணம், பழநித்திருவாயிரம், திருவரங்கதிருவாயிரம், தில்லைத் திருவாயிரம் தெய்வத்திருவாயிரம், ஏழாயிரப்பிரபந்தம் என்றெல்லாம் இயற்றியுள்ளார். இவரது நூலில் புலவர்புராணம் தலையாதுஎன்னலாம்.

நூல்வெளியீடு நூலாசியர்சுவாமிகளின்மகனும் மாணவரும்அன சந்தப்புலமை தவத்திரு செந்நிலைய சுவாமிகளைத் தந்தையாகக் கொண்டவர் தவத்திரு முருகதாச சுவாமிகள் சுவாமிகளின் நூல்-களில் ஈடுபாடு கொள்ளப்பாடங்கள் கேட்டார் சுவாமிகள் எழுதிய ஏடுபார்த் தெழுதுவதில் பெரும்பயிற்சி கொண்டனர் சந்தப்பாடல் முதல்எந்தப்பாடலாயினும் தங்குதடையற இயற்றுவதில் வல்லவர் தவத்திருமுருகதாசசுவாமிகள். இவர்களின் 80 வது வயது தொடங்-கும். இந்நன்னாளில் முத்துவிழாமலராக இந்நூலை வண்ணச்சரபம் தண்டபாணிசுவாமிகள் நூல் வெளியீட்டு நிதியிலிருந்து பதிப்பித்து வெளியிடுகிறோம்.

**வேண்டுகோள்:-** சொல்லிய பாட்டின்பொருள் உணர்ந்து எல்லா உயிரும் இன்புற்றிருக்கத்தொண்டாற்றும் அருளாட்சியாளர்களாக மாற்றவும் விழாநாயகர் தவத்திரு சுவாமிகள் முத்து விழாவைப் போல் மேலும் பல விழாக்களைகாண இன்றுமொரு நூறுண்டிரும் எனஎல்லாம் வல்ல எந்தை கந்தவேள் திருவடிகள் வாழ்த்தவும் அன்புப் பெருமக்களை வேண்டுகிறேன்.

இங்ஙனம்,
தி. மு சங்கரலிங்கம்
தமிழாசிரியர்,
கௌமார மடாலயம்.

திருவாமாத்தூர்
விழுப்புரம்
24-4-86

# நூலின் சிறப்பும் நுண்ணிய குறிப்பும்

வெண்பா

மருளாட்சி கொண்(டு)ஊன் மகத்திலிடல் உண்ணல்
இருளாட்சி என்னவுளத் தெண்ணி-அருளாட்சி
நன்னூல் இதனைவண் ணச்சரபம் விண்டவண்மை
முன்னூல்முப் பாலின் முறை.

வண்ணச்சரபம் தண்டபாணிசுவாமிகள் அருளிய நூல்கள் மிக பல. பொதுநூல், சிறப்புநூல் திருவெண்பா, விற்பனம் என்ற நான்கு நூலுடன் ஐந்தாவதாக அருளாட்சி என்றஇவ்வரிய நூலையும்அருளினார் சுவாமிகள்காலத்தில் பதிப்பான போதிலும் இந்நூல்இப்போது கிடைப்பதில்லை எனவே தற்போது பதிப்பிக்க நேர்ந்தது.

"நூலினதொடக்கத்தில்''வள்ளுவப்பேர்மாமன்மகட்புணர்ந்து மக்களன்ன தெள்ளுத்தமிழ் நூல் நான்குசெப்பினேன்'' என்கிறார் சுவாமிகள் முறை வைத்துக்கூறியிருப்பது சிந்திக்கத்தக்கதாகும் இதையொட்டி இந்நூற்கு சிறப்புக் கவியாக வளவனூர் குமாரபுரி திருமடத்தன் தலைவராயிருந்த தவத்திரு சண்முகசுவாமிகள் அருளிய இரண்டுகவிகளும் வியப்பில் ஆழ்த்தும் தன்மையினவாகும் அவ்விபரமாவது :-

ஆதி, பகவன் என்பவருக்கு மக்களாகப் பிறந்தவர்கள் எழுவர். ஔவை முதலாகத்திருவள்ளுவர்ஈறுகவுள்ளவர்களுள்வள்ளியம்மை என்பாரும் ஒருவர். முருகப்பெருமானை உபாசிப்பவர்கள் முருகனைத் தந்தையாகப் போற்றுவது மரபு. அவ்வாறுயின் வள்ளியம்மை அப்பெருமான் சக்திகளில்ஒன்று எனவே தாயாகினள்வள்ளிநாயகி-யார். பெற்றவள் குறமகள் என்பது சஷ்டிக்கவசம். ஆதலால் தாயுடன் பிறந்த வள்ளுவனார் மாமனார் ஆயினர். அவர் தந்த திருக்குறள் அவர்தம்மகளாகிறது. அந்நூலில்முழுஈடுபாடுகொண்ட காரணம்பற்றித்தமக்கு மனைவியாக அமையும். அதன்விளைவாகஅதா-வது அக்கருத்தை அப்படியே ஏற்று முன்னர் குறிப்பிட்டநான்கு நூலுடன்இவ்அருளாட்சியும்நூலாசிரியர்தண்டபாணிசுவாமிகளின் மக்களாவர் என்றகருத்து நூல்வரலாற்றிலிருந்தும் சண்முகசுவாமி-கள் கூறிய கவியின் கருத்திலிருந்தும் புலனாகிறது.

அதாவது திருவள்ளுவரின் மருகனான தண்டபாணிசுவாமிகள் வள்ளிநாயகியார் மகனவர். மாமன்மகள் போன்ற திருக்குறளை உணர்ந்ததின்பயனாக மேலேகூறியஐந்துநூற்களைபெற்றுத்தந்தனர்.

எனவே தான் தண்டபாணிசுவாமிகளின் துறவியாக வாழ்கிறுன் என்கிறுர் ஒருபாடலில் 'ஐந்துபெண் பெற்றவன்ஆண்டி' என்பது பழமொழியன்றே.

வள்ளுவனுர் தம்மருமகன் வள்ளிதரும் மாண்புதல்வன்
கொள்ளுமுறையாற்குறளைக் கூடியே-தெள்ளுத்தமிழ்ப்
பாண்டியினில் ஐந்துநன்னூற் பாவையரைப் பெற்றதினுல்
ஆண்டியுருவாத்திகழ்கின்றுன் என்கிறுர் சண்முகசுவாமிகள்

மேலும் தமக்கு அதனுல் என்னபயன் ஏற்பட்டது என்பதையும் ஷி சண்முகசுவாமிகள் மற்ெருருபாடலில்கூறுகிறுர். மகள்,பருவம் எய்திஞல தாய் கிழவிநிலே பெறுவாள் அதுபோல் திருக்குறள்காலத் -தால் மிகப்பழமையானது தாயைப்போலப்பிள்ளே என்றுங்கு இவ் ஐந்துநூற்களும் திருக்குறளேப்போலவே தெள்ளிய கருத்துடன் இருப்பதால் இளமை நோக்கி என்மனம் அவாவுகிறது என்று அவர் கூறும் செய்தி வியப்பில் ஆழ்த்துவதாயுள்ளதன்றே:

வேய்கிளர்தோள் மெல்லிநல்லார் மெய்ப்பருவம் எய்துங்கால்
தாய்கிழவி யாதல் சரதமால்- ஆய்குறட்பெண்
ஆற்றதண்ட பாணியைச்சேர்ந் தைந்துபெண் பெற்றதனுல்
யான்றழைக்கும் மோகமெய்தி னேன்

என்றும், சிறப்பித்துக்கூறுவதால் தண்டபாணி சுவாமிகள் அருளிய பொதுநூல், சிறப்புநூல் விற்பனம், திருவெண்பா, அருளாட்சி என்ற ஐந்து அரிய நூலின் சிறப்பையறியலாம்

2 'தேற்றம்' என்பதில்வேதத்தின்முதற்காண்டத்தில்வேள்வியில் கொலே. புலால், அவிசொரிதல் பற்றிக் கூறியதால் சீவகருணேக்கும புறம்பானமைமற்றிப் பிரமன் நாவிலிருந்துகூறிய கலேமகளே மதி-யேன் எனவும், "அவிசொரிந்து ஆயிரம்வேட்டலின் ஒன்றன் உயிர் செகுத்துண்ணுமை நன்று என்று கூறிய கலேமகளின் உயர்வைக் கண்டபின் மதித்தேன் எனவும் கூறியது கலேமகள் வெவ்வேறென்ப தல்ல தகுதியும், எத்தகைத்தோர் நாவிலிருந்துஎவ்வாறுபுகல்கிறுள் என்பதும் கருதுதற்குரியதாகும். நூலாசிரியர் தண்டபாணி சுவமிகள்,சீவகருணேயைஉயிர்மூச்சாகக்கொண்டுவாழ்ந்தனர். தாமருளிய நூல்களில் இக்கருத்தை வலியுறுத்தியும், சிறப்பித்தும் சொல்லியுள் -ளேன் என்றுபின்னர்இயற்றும் நூலிற்கூறுவதுண்டு. அம்முறைபிற் கருணேத்த சீவகருணேத்திறத்தை

நல்லுயிர்க்கட் கொல்லாமை, புலேயா டாமை
நான்குநூல் அருளாட்சி ஞானச் செல்வம்
புல்லுலும்வருக் கக்குறளா தியபன் நூலில்

புகன்றுள்ளேன், ஔவைதெய்வப் புலவன் போன்றோர்
சொல்லுமுன்னூல் களும்விளக்கும்
என்றுதியானுநுபூதி என்ற தமதுபிறிதொரு நூலில் இந்நூல் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.
வேதஞ் சொல்லினும் விரிஞன் ஆதியர்
நேரிற் கூறினும் நீசர்க் குரித்தாம்
கொலைபுலை செய்தல்கூடா தன்றேஎன்பதும்நூலாசிரியர்கொள்கை.

64-ம் பாடலில்பைத்தலையபாம்பைப்பருகும்பசியமயில் என்பது பாம்புக்குப்பகைமயில், அதுமுட்டையாயிருக்கும்போதேபாம்பினுல் உண்ணப்படும்என்பதன்மூலம் உபாசனையில்வரும்காட்சி, அருளுரை இவற்ருல்மகிழ்வதும் சித்தியற்ற முயல்வதும்கூடாது முழுமையான அருள்பெற்ற பின்பே உலகில் செயல்புரிதல் வேண்டுமென்பதைப் புலப்படுத்துகிருர்.

124-ம் பாடலில்சமயவகையாகசௌரம், சைவம், சாத்தேய, வைணவம், காணுபத்தியம், கௌமாரம், இவ்வாறு சமயமும் வேத -வுடன்பாடானவை இவற்றை விட்டு வேறில்லை. ஏதேனும் இனிஒன் றுண்டாயினும் இந்தஆறு சமயத்தைச் சார்ந்ததாயிருக்குமன்றிப் பிறிதில்லை என்பதை நூலாசிரியர் தெளிவுபடுத்தி

கானமறை நெறிஆறே அவைகலந்தே
கழிக்கரும்அ தீதம்ஒன்றும் கவினும் கண்டீர்
ஈனமிகு புலைச்சமயம் இனிஒன்றுண்டா
யினும்அதுவும் இவ்விருமூன் றினது சார்பே

என்று நியாணுநுபூதிநூலிற் குறிப்பிடுகிருர் இவ்ஆறுசமயங்களுடன் இணைந்து, பிரிந்தும்உள்ளசமயம் சமயாதீதமாகும் எனவே இவ்ஏழு சமயமேயன்றி வேறில்லை சமயத்தைஒட்டியே நாட்களும் ஏழாக வுள்ளன என்பதை
அநந்த பேதத்து அறுவகைச் சமயமும்
அவைமுழுது ஒருவலும் தழுவலும் ஆகும்
அதீதம் ஒன்றும் ஆய ஏழும்
வழிபடற் பொருட்டே வாரம்ஏ ழாயவே

எனத்தமது சத்திய சூத்திர நூலில் குறிப்பிடுகிருர் நூலாசிரியர்.

| | | | |
|---|---|---|---|
| சௌரம் | சூரியன் | ஞாயிறு | ஒளித்தன்மை |
| சைவம் | சிவன் | திங்கள் | ஒடுக்குதல் |
| சாத்தேயம் | சக்தி | செவ்வாய் | உதவுதல் |
| வைணவம் | மால் | புதன் | காத்தல் |
| காணுபத்தியம் | கணபதி | வியாழன் | இடையூறுபோக்கல் |
| கௌமாரம் | முருகன் | வெள்ளி | அருளல் |
| சமயாதீதம் | குரு | சனி | உபதேசம் |

இவ்ஆறுசமயமும், கடவுளாகும். கடவுளர்தன்மையும் கிழமையும் தம்முள்ஒத்து விளங்குவதை வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் அநுபவமுறையில் கண்டுநம்மவருக் கருளியுள்ளார்கள்.

127-ம்பாடலில் சர்க்கரை, கற்கண்டு, வெல்லம் என்பவை பெயர் வடிவில் வேறுபட்டாலும் இனிப்புத்தன்மையில் ஒன்ருக விளங்குவதைக் காணலாம். சமயக்கடவுளர் பலராயினும் வடிவம் பலவாயினும் பரம் பொருள் ஒன்றே என்பதை விளக்குகிறது சிவகருணையை அடிப்படையாகக்கொண்டு தொடங்கிக்கடவுள்நிலை உபாசனைத்திறன், அருளாற்றல் இவைகளை விளக்கிய வகையில் திருக்குறட் கருத்தை விளக்கும் நூலாகிய இவ்வருளாட்சிநூலை 133 அதிகாரங்கள் போல் 133 பாடல்களில் அமைத்திருப்பதும், அருள் என்று தொடங்கி அருள்என அந்தாதிமுறையில் அமைந்திருப்பதும். நூலாசிரியர் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் திருக்குறள் மீதும், வள்ளுவப்பேராசான்மீதும் கொண்டுள்ள அளவற்றஈடுபாட்டைக்காண முடிகிறது இவைபோற்பல. விரிப்பிற்பெருகும். அன்பர்கள் படித்துணர்வார்களாக.



முத்துவிழா நாயகர்



தவத்திரு. முருகதாச சுவாமிகள்
கௌமாரமடாலயம், திருவாமாத்தூர்

உ

குருவே துணை

## கோவை சிரவணபுரம் கௌமாரமடாலயத்தலைவர்

# சிரவையாதீனம்

# தவத்திரு சுந்தரசுவாமிகள் பாராட்டுக்கவி

---

கந்தவண்ணப் பொழில்நெல்லை நகர்ச்செந்தில்
நாயகரும். கற்புப் பண்பு
சொந்தவண்ண மாயமைந்த பேச்சுமுத்தாம்
அம்மையும்செய் தூய வாழ்க்கை
தந்தஅண்ணல் முருகருளை வாரிகவி
மாரிபொழி வள்ள லான
சந்தவண்ணத் திருமுருக தாசதண்ட
பாணிகுரு தனய ரைாய்,

வந்தசெந்தில் நாயகர்தம் திருமகவா
வந்துதித்தம் மரபுக் கேற்பச்
செந்தகைய கவுமார நெறிபரப்பித்
திருமுருக தாசர் செப்பும்
சந்தமிகு பாச்சுவடி எடுத்தெழுதி
அச்சியற்றும் தகையார் எங்கள்
வந்தனைகட் குரியதிரு முருகதா
சச்சாமி வாழ்க! வாழ்க!

வெண்பாநல் வண்பாவால் அமைபிள்ளைக்
கவிமுதலா விளங்கும் பாடல்
பண்பாகத் தந்ததுடன் அச்சியற்றி
வண்சரபப் பாட்டன் பாட்டுக்
கெண்வகையில் உரையியற்றித் தண்பூசை
வேற்காற்றும் எங்கட் குற்ற
நண்பாகும் தவமுருக தாசரன்பு
மென்மேலும் நயந்து வாழி!

சித்திரையாம் திங்களிலே சித்திரையாம்
உடுநாளில் சீலர் போற்ற
இத்தரையில் வந்துதித்தார்; எண்பதிசை
ஆண்டுறு நாள் இசைவ தாலே
முத்துவிழாக் கொண்டமைந்த வித்தகரின்
நினைவு விழா விளங்கும் வண்ணம்
புத்தகமாய் அருளாட்சி எனும்நூலை
பதிப்பித்துப் புதுப்பித் தாரே.

தவமுருக தாசரது மரபுவழி
வந்துதித்த தன்மைக் கேற்ப
பவமகற்றும் வேற்பூசைச் சந்தவண்ணக்
கவிப்பனுவல் பாடும் ஆற்றல்
நவமுறவே பெற்றுவி நன்குடியில்
மாதையினில் நவில்ம டங்கள்
சிவமுறவே வளர்முருக தாசரது
திருமரபு சிறந்து வாழி!

நல்லதிரு உள்ளத்தால் நயந்துவளர்
பேரன்பால் நயக்கப் பெற்ற
வல்முருக தாசசுவா மிகள்முத்து
விழாநாளை வாய்க்கப் பெற்றார்
சொல்நூறுண் டிவ்வுலகில் திருமரபு
தழைக்கும்வகை தூய தான
பல்பணியும் செய்துயர வேல்முருகன்
தாள்மலரைப் பணிகு வோமே.

வெண்பா.

திருவாமாத் தூரும் திருப்பழனி யூரும்
மருவு திருமடங்கள் வாழ்க!-திருத்தண்ட
பாணி சுவாமிகள் பண்பார் திருமரபு
மாணிசையாய் வாழ்க! வளர்ந்து

---

கோவை-பேரூர் ஆதீனம்

# தவத்திரு சாந்தலிங்க இராமசாமியடிகளார்

## பாராட்டுக் கவிகள்

---

சீரார் அருமைத் தென்பாண்டித் திருநெல்வேலி தனிலுதித்துக்
கூரார் வேல்வழி பாடாற்றிக் குலவும் தமிழ்நூல் பலவருளிப்
பாரார் உவக்கப் பனையேட்டில் பண்பாய் எழுதி வைத்தருளிப்
பேரரார் திடும்எம் குருபரனும் பிறங்கு தண்ட பாணியனே.

அன்ன வன்றன் திருமகனாய் அவிரும் செந்தி னாயகவேள்
என்னும் பெரியான் தருமக்க ளிடைவாழ் முருக தாசப்பேர்
மன்னும் முனிவன் எழிற்சந்த மாகும் பற்பல் கவிகள்தரும்
அன்பு மிக்கான் அவனிமிசை அருமைப் பணிசெய் மேலவனே.

ஏட்டில் எழுதி வைத்திட்ட இனிய சந்தக் கவிமுதலாம்
பாட்டன் தந்த பாடல்களைப் பதிப்பித் தளிக்கும் முயற்சியுளான்
நாட்டன் புடனே எமையெல்லாம் நடத்து விக்கும் புகழ்ச்சியுளான்
வாட்ட மில்சீர் நலமுடனே வாழ்க முருக தாசனம்மா

முத்து விழாவைக் கண்டுவக்கும் முருகதாசப் பெருந்தகையான்
இத்தரை உவந்து கொண்டாட எழில்நூ றுண்டு விழாக்காண
சித்த முவந்து போற்றுகிறேன் செவ்வேள் முருகன் அருளாலும்
முத்தமிழ் வண்ணச் சரபகுரு மூதரு ளாலும் வாழியவே.

செந்தமிழ் மன்னும் சிரவைதனில் சீரார் சுந்தர முனிவன்றன்
சிந்தை உவப்பக் குருபரன்றன் திருச்சந் நிதியில் திருவருளால்
முந்நும் தமிழ்ச்சீ ருடன்செய்யும் முத்து விழாப்போல் பல்விழாக்கள்
எந்தம் முருக தாசமுனி. ஏற்று வாழ வேண்டுவனே.

உ

குருவே துணை

திருவாமாத்தூர் கௌமாரமடாலயத்தலைவர்

தவத்திரு முருகதாச சுவாமிகளின்

## எண்பதாண்டு முத்து விழாவின் போது

வழங்கும் வணக்கப் பா

---

சாற்றுபுகழ் வண்ணச் சரபகுரு நாதரருள்
போற்றுசெந்தி லையகர்தம் புத்திரனாத்-தோற்றும்
முருகதா சப்பேர் முனிவரன்பு நாளும்
பெருகவிழை வேன்யான் பெரிது

ஆறுபத்தென் றோத அவிரும் மணிவிழா
மீறுபுகழ் மாதையினில் மேவுமன்றும்-தேறு
பழனியினில் ஏழுபத்தா எய்தும் பவள
விழவினிலும் உற்றேன் வியந்து

எண்பதெனக் கூற இசையுமுயர் முத்துவிழா
கண்பெற்ற நற்பயனை காண்கின்றேன்-திண்பொருந்த
மேவும்பத் தாண்டில் மிளிர்வயிர நல்விழாவும்
ஆவலுடன் காணவிழை வாம்

சந்தச் சரபகுரு தன்மரபின் மூன்றுகும்
தொந்தமுற அப்புனிதன் தூயபெயர்-வந்தமையச்
சாருந் தவமுருக தாச ரினியபண்பை
யாருந் தெரிவார் எளிது

சிரவையிரா மானந்தத் தேவ னருட்சீர்
விரவ வருமினிய மேன்மை-பரவுமன்பு
பூணமிளிர் சுந்தரப்பேர்ப் புண்ணியனார் இவ்விழாவை
மாணமையச் செய்தல் மரபு

பேரூர் சிரவையெனப் பேசு மிருமடத்தின்
சீரூர் தொடர்பின் சிறப்புடையார்-பாரூடு
செய்யதமிழ்த் தொண்டு திகழப்பல் லாண்டின்பாய்
வையமிசை வாழ்க மகிழ்ந்து

திருநெல்வேலி
24—4—86

இவண்
சிவகலை மு. சுப்பையா
சிரவையாதீனப்புலவன்.

குருவே துணை

திருவாமாத்தூர் கௌமாரமடாலயத்தலைவர்

தவத்திரு முருகதாச சுவாமிகளின்

## எண்பதாண்டு முத்து விழாவின் போது

## வழங்கும் வணக்கப் பா

---

திருநெல் வேலித் திருத்தண்ட பாணிக்
குருபரன் மகனெனக் குலவிய செந்தி
நாயக அடிகளார் நன்மக னாகத்
தோன்றிஅக் குருமகான் துலங்கருள் கொண்டு
ஏட்டினில் எழுதிய இன்றமிழ்ப் பாக்களைக்
காகிதத் தெழுதிக் கவினுறப் பதித்திடும்
முயற்சி யாளர் ; மூதறி புலவர் ;
சந்தக் கவிமுதல் எந்தக் கவியையும்
தடையற எழுதும் தகைமை யாளர் ;
முருகன் அருள்பெறு முருகதா சப்பேர்
தாங்கும் அடிகளார்; தகுநலங் கொண்டு
எண்பதாம் அகவை எய்துபண் பாளர் ;
முத்து விழாக்கொளும் முதுமைமிக் கறிஞர் ;
வளவ னூரிடை வளர்சண் முகப்பேர்
ஞானித் தொடர்புகொள் நலமிகு வண்ணச்
சரபரைப் போலச் சார்ந்த அவர்தம்
மரபு வழிவரு மகான் ;இவர் தமைப்போல்
திருவா மாத்தூர் திகழ்மடத் தினிலுள
இவர்தம் குடும்பமும் இயைந்த வளவனூர்
மக்கள்தம் முடனும் மருவுமெம் குடும்பத்
துடனும் தொடர்புகொண் டுறுவது யாங்கள்
செய்தபுண் ணியமெனச் சிந்தையிற் கொண்டுளோம் ;
வியனுர் முத்து விழாக்கொளும் அடிகள்
இவ்விழாப் போல எதிர்வருங் காலத்து
வயிர விழா, நூற் றுண்டு வளர்விழா
ஆதிய காண அறுமுகன் திருவருள்
செய்ய அவனருட் திருவடி மலர்களை
வணங்கி வாழ்த்துவம் வாழ்கபல் லாண்டே.

வளவனூர்
விழுப்புரம் T. K.
24—4—86

இன்னணம்
இரா. புருஷோத்தமன்
இரா. கோவிந்தராசன்

நூலாசிரியர்



வண்ணச்சரபம்

திருப்புகழ்ச்சுவாமிகள் முருகதாச சுவாமிகள்

என வழங்கும்

## அருள்மிகு. தண்டபாணி சுவாமிகள்

உ

குருவே துணை.

# அருளாட்சி

---

## காப்பு

தெருளாட்சிக் காரருண்மைச் சிந்தையினுக் கான
அருளாட்சி நூலொன் றளிக்கும்-பொருளாட்சி
கொண்டவரை நாடிக் குலைகுலைந்து வாடாமெய்த்
தொண்டர்மலர்ப் பாதத் துகள்.

தெருள் ஆட்சி தெளிந்தகுணம் அருளாட்சி சீவகருணையைப் பற்றிய குலைகுலைந்து மனம் நொந்து. துகள்-பாததூசி.

## நூல்வரலாறு

வள்ளுவப்பேர் மாமன் மகட்புணர்ந்து மக்களன்ன
தெள்ளுதமிழ் நூல்நான்கு செப்பினேன்-விள்ளும்
அவைக்குத் துணையாம் அருளாட்சி நூல்கள்
எவைக்கும் உயிராவ தே.

மாமன் விவரம் முன்னுரையிற் காண்க மகள் திருக்குறளின் உவமை எவைக்கும்-எல்லா நூற்கட்கும்.

## தேற்றம்

நூன்முகப்பில் வேள்வி நுவன்ற கொடுமையெண்ணி
நான்முகத்தோன் நாவினளை நான்மதியேன்-ஊன்முகக்க
ஒண்ணுதென் முப்பால் உரைத்தோன் ஒருநாவின்
பெண்ணுள் உயர்ச்சிகண்ட பின்.

நூல்முகப்பு வேதத்தின் முதற்பகுதியான கருமகாண்டம் கொடுமை-கொலை வேள்விபற்றிக்கூறியது. முகத்தல்-உண்ணல் முப்பால்-திருக்குறள்

## நூல்

அருள்போலும் மிக்கநலம் அங்குமிங்கும் இல்லை
இருள்போக்கும் மெய்யொளியாம் ஈசன்-அருள்போதத்(து)
எல்லா உயிர்க்கும்நலம் ஈவதனுல் அல்லவோ
நல்லான் எனவிளங்கி ைன். 1.

அருள்-சிவகருணை. அங்கும் இங்கும் மேலுலகிலும் இவ்வுலகிலும்,
இருள்-அஞ்ஞானம்

தம்மில் எளியார் தமக்கிரங்கும் தக்கோர்பால்
விம்மி யழுந்துயரம் மேவாதே-இம்மி
அளவெய்தின் மேருவொப்ப தாம்என் றிடையும்
உளமுள்ளார் ஆவார் உவர். 2

தம்மில்-தம்மைவிட விம்மி, ஒங்கி-இம்மி மிகக்குறைந்த அளவு மேரு
ஒப்பதா மலைபோல உவர் இடைச்சுட்டு

இன்னுமொரு தாய்வயிற்றில் ஏகா(து) எழில்வீட்டின்
மன்னும் நிமித்தம்வந்த மாந்தர்க்கும்-முன்னுதிக்கும்
நல்லடையா ளத்தை நவிலுங்கால், நாற்றமுண்பான்
கொல்லல் இசையாக் குணம். 3.

நாற்றம்-புலால்உணவு உண்பான்-உண்ணும் பொருட்டு

ஆருயிர்கட் கொன்றுகும் ஆக்கம் கடையென்னப்
பாருணரச் சொன்னேன் பதம்போற்றிக்-கூருலவா
வச்சிரத்தான் ஊரார் மகத்தூண் வெறுத்தனரேல்
மெச்சிடுவார் வல்லோர் மிக. 4.

வச்சிரத்தான்-இந்திரன் ஊரார்-தேவர்கள் மகத்துஊன் வேள்வி
யின் மூலம்பெய்யும் அவி அவிசொரிந்து' என்ற குறட்பா
கூறியவர்-திருவள்ளுவர்

எந்தநலம் இல்லார் எனினும், இரக்கமென்னும்
செந்தகையொன் றெய்திலவர் தேவர்க்கும்-முந்தறிஞர்
என்னத் தெளிந்தோன் எவனே அவன்கொடுங்கோல்
மன்னர்க்(கு) எமனுகு வான். 5.

முந்தறிஞர்-முதிர்ந்தஞானமுடையவர்

அருநோன்பு கொன்றருந்தி டாமையெனச் சொன்ன
திருநூலே விட்டுச் சிலர்தாம்-தருநாடு
கொள்வேம்என் றெண்ணிக் கொலேமுயன்றூன் துய்க்கின்
எள்வேம் அவரைநிதம் யாம் 6. (ருர்.

திருநூல்-திருக்குறள்நெறி தருநாடு-கற்பகநாடான தேவருலகம் எண்ணி அப்படியிருப்பதாகக் கற்பனைசெய்து எள்வேம்-பழி கூறுவோம்.

புல்லுண்பவற்றைப் புசிப்பார் குலமுழுதும்
கொல்லும் நலத்தைக் குறித்தென்றும்-அல்லும்
பகலும் முயல்வோரே பல்லுலகும் செய்தோன்
மகனென்ற மேன்மைபெறு வார். 7.

புல்உண்பவை-முயல் மான் ஆடுமாடு ஆதிய எளிய உயிரினம். மகன்-அவதாரபுருடன்

வலியார் மெலியார்தம் மாட்டிறுமாப் புய்க்கிற்
புலிபோற் சினவாப் பொறுமை-நலியாத
வீரத் தனிவேற்கை வேந்தருக்கும் மெய்யருட்சீர்க்
காரருக்கும் ஆகாக் கடை 8.

மாட்டு-பக்கம். நலியாத-சோரிவடையாத கடை-கீழ்ப்பட்டது

தானோர் உயிர்வதையார். தன்விழியின் நேர்ஒருவன்
ஏனேகொன் ருலும் இரங்குவார்-வானோர்க்கும்
மேலாம் பதத்தினிடை வீற்றிருக்கும் மெய்யுணர்ந்தோர்
போலார் பொறுப்பார் புகழ். 9.

ஏனே-எதன்பொருட்டானலும், பொறுப்பார்-பெறுவார்கள்.

சித்தியொடு முத்திநலம் சேரப் பெறல்வேண்டிப்
பத்தி முயன்றுழைக்கும் பண்போரே-எத்திசையும்
நத்திக் கொளநிறைந்து நாசமின்றி வாழ்ஒருவன்
சத்திக் கிசைந்தமனத் தார். 10.

நத்திக்கொள-விரும்பும்படி ஒருவன்-கடவுள் சத்திக்கு-அருளுக்கு

தன்னேர் உயிர்கட் சதிசெய்யா மானிடர்தம்
பின்னே திரிவான் பிரான்என்று-முன்னே

மறைகள் பகர்ந்தன்றி மாதவத்தோர் தாமும்
அறைவார் அதுநிசமே யாம். 11.

சதிசெய்யா-கொல்லாத, பிரான்-கடவுள்

எல்லாச் செயலும் இறையறிவான் என்றுணர்ந்த
வல்லார் பலருமுயிர் மற்றென்று-பொல்லாத்
துயரடைந்தற் காணில் துடிதுடிக்கும் நெஞ்சத்(து)
அயர்வொழிக்க மாட்டா தவர் 12.

ஒருசிற்றுயிரை-மற்றொருவலியஉயிரால், துடிது டிக்குதல்-வதைபடல்.

தேவர் எனினும்ஒன்றைச் செற்றருந்தில் தீயோரே;
யாவர் எனினுமதொன் றில்லாரேற்-பாவ
வினைதீர்ந்து ளாரேமெய் மெய்யன் றுரைப்போர்
எனையாளும் தாளுடையா ரே 13.

தேவர்எனினும்-பிறப்பால் உயர்ந்தவராயினும் தாள்-திருவடியுள்ள குருநாதன்

நான்முகவன் சொல்லதென நம்பி நளிர்கடற்பார்
மேன்மகஞ்செய் தூனருந்தும் வேதியர்தம்-பான்மை
அவன்நேர் வரினும்அதொன்(று) ஆகாதென் றார்க்கும்
தவனேசர்க் காகாத தே 14.

அவன்-பிரமதேவனே ஆகாது-கொலைவேள்வினை ஒப்புவது.

நல்லருள்என் றுள்ளவொரு நாமம் நமைப்படைத்தோன்
வல்லமைக்கும் கொன்றருந்தா மாட்சிக்கும்-அல்லதுமற்[று]
எந்தப் பொருட்கும் இசையா தெனத்தினமும்
சந்தப் புலவர்சொல்கின் றார் 15.

நல்லருள்-மேலானகருணையினன், சந்தப்புலவர்-தமிழ்ப்புலவர்

தெய்வம் பலவெனும்பொய்ச் சீராட்டு ளார்ஒருக்கால்
உய்வடைந்திட் டாலும் உறலாகும்-கைவலியாற்
கொன்று புலாலருந்திக் கொக்கரிக்கும் கோலுடையார்
என்றுமுய்ய மாட்டார்க ளே 16.

சீராட்டு-பிடிவாதம் கொக்கரித்தல்-ஆரவாரித்தல்,கோது-தவறு

ஓருயிரின் தேகத் துறுநோய் ஒழிய,மற்ருேர்
சீருயிரைக் கொல்வார் சிலமாந்தர்-பாருலகில்
இத்தனைநாள் தாம்வாழ்வ தென்றுமறி யாரிதெண்ணிற்
சுத்தமுழு மூடத் தொழில் 17

ஒழிய-நீங்கும் பொருட்டு

ஊனேற வுண்பார் உயர்ச்சி உறுங்காலம்
தானே தனைக்கிணையாம் தற்பரனும்-வானேற்றம்
வேண்டேம் எனுமுவகை மிகக்குடைய மேலோர்தம்
கூண்டேசும் நிந்தை கொளும் 18

ஏறஉண்பார்-மிகுதியாகப்புசிப் போர். தற்பரன்-கடவுள்
கூண்டு-கூட்டம்

ஈசன் விரும்புநலம் எல்லாம் கொடுத்தினைய
தேசமறி யப்பதத்தில் சேர்த்தாலும்-நீசர்க்(கு)
இனிதாய ஊன்ஒருசிற் றெள்ளளவுண் டுள்ளார்
எனில்யான் அவரைமதி யேன் 19

பதத்தில்-வீடுபேற்றில் நீசர்க்கு- கீழ்மக்கட்கு

சித்தியொரு சற்றியற்றிச் செத்தோரை யும் உலகோர்
முத்திபெற்றுர் என்றே மொழிகுவார்-எத்திறத்தோர்
ஆனாலும் கொல்லா அருநோன்பொன் றில்லாரேல்
மாஞர் வயிற்றில்நுழை வார். 20

அரும்நோன்பு-மேலான விரதம். மாஞர்-மகளிரது.

மேனாள் சிறுத்தொண்டன் வீட்டில்வரும் ஈசனையும்
தானா இகழத் தலைப்பட்டார்-ஊனுரும்
வேள்விப் புகைமுகக்கும் விண்ணவரை எண்ணுவரோ
நீள்விற் றுனை நுதல்மின் னே. 21

இகழ-பிள்ளைக்கறிவேட்டமைபற்றி, மின்னே-கலைமகளே.

ஆட்டு வடிவத்(து) அவுணன் தனையருந்தி
மீட்டுருவெய் தா(து)எரித்த மேலானைக்-கேட்டுணவு
சின்னாள் நுகரும்வினைத் தீமையுற்ருர் என்றும்நனி
சொன்னரும் உண்டே துணிந்து. 22.

அவுணன்-வாதாவிஎன்றஅசுரன். மேலோன்-அகத்தியர்.
கேட்டுணவு-புலால்உணவைப்புசித்தார்

நல்ல உணவருந்தும் நாகரிகத் தோர்க்கலது
வல்லமனி தப்பிறவி வாயாது-கொல்லல்
முயன்றான் அருந்திலவை முற்றுமாத் தோன்றும்
வியன்தோய்ந் துழல்வார்மெய் மெய். 23

அவை-தம்மாற்கொல்லப்பட்ட உயிர்களாகப்பிறந்து

ஒருடல்விட் டேகும் உயிர்வே றுடல்எடுக்கும்
சீருணரும் மாந்தர் சிலர்ஏனை-நீருடையார்
பல்லோர்இம் மாற்றம் பகர்நூலும் அப்படியே
எல்லோர்க்கும் தோன்ற திது. 24

ஏனைநூல்-உடல்வேறுஉயிர்வேறில்லைஎன்றமதம்

எந்தவே தத்தில் இயம்பியவா றேனுமுயிர்
நந்தவதைத் தூனருந்தல் நாதனது-சிந்தனைக்கும்
சம்மதமாம் என்னிலவன் தாள்தா மரைத்துணைக்கும்
மும்மலமாம் பேய்களஞ்சு மோ. 25

தாள்தாமரை-தாமரைமலர்ஒத்ததிருவடி மும்மலம்-ஆணவம்
கன்மம்-மாயை

போதம் கடந்தபரி பூரணன்தா னேபுகலல்
வேதங்க ளாகுமென்னில் வேற்றுயிர்கட்(கு)-ஏதங்கள்
செய்யச்சொ ஞல்ஒருக்கால் தீயோர்கள் செப்பியவற்(று)
ஐயப்ப டாதிசைத்த தாம் 26

போதம்கடந்த-அறிதற்கரிய ஏதங்கள் கொலைசெய்யும்படி தீயோர்
கள்-கொலைபுலையைவிரும்பியசிலர்இடைச்செறுகலாக்கிவிட்டனர்

சீலத்(து) உணவதனல் தேகம்வளர்த் தார்சிலர்ஓர்
காலத்தில் ஊனருந்தக் கண்டோமே-ஆலத்தை
உண்டாவி நீத்தார்க்(கு உயரார் உலகில்நித்தம்
கண்டார் வசைகொள் கையால் 27

சீலத்துணவு-தூயஉணவு. ஆலத்தை-விடத்தைஉண்டாயினும்
இறப்பார்புலால்உண்டுவாழார் வசை-நிந்தை

ஆவிநிலேயுண்ணு அருளார்ந்த நற்குலத்தோர்
பாவிகளாம் மற்றையர்வாழ் பாலேகிச்-சேவித்துப்
பொன்தேடி வாழ்வதெண்ணிற் பொல்லாப் புழுநரகில்
அன்றே விழுவதொப்பா மால். 28

ஆவிநிலே-உயிர்உள்ளவற்றை. அன்றே-உயிர்உள்ளபோதே
(இறந்தபின்பல்ல)

கொல்வார் நரகிற் குடியாவார் என்னமுன்னூல்
சொல்வாய்மை ஓர்ந்தும் துணிவாரை-வலவாட்கை
கொண்டடக்கல் நீதிக் குறையன்(று) அவருலகத் து.
உண்டனபல் கோடி உயிர். 29

முன்னூல்-திருக்குறள் வாய்மை-உண்மையை அடக்கல்-
தண்டித்தல்

கொன்றநந்து வான்ஒருவற் கூர்வேல் குடர்குழப்ப
வென்றவன்பா லக்கணத்தின் மேவுமே-துன்றகில
மீதுநால் திக்கில் விளங்கும் உயிரனந்தம்
பாதுகாத் திட்ட பயன். 30

ஒருவன்-ஒருவனேப் பாதுகாத்திட்ட-உயிர்களேவாழச்செய்த
புண்ணியம்

மானிடராப் பாருலகில் வந்தோர் அனேவர்களும்
ஊனினம்தின் ஞமை உஞற்றுவான்-மேனிலத்தில்
உள்ளான்என் ரேதும் ஒருவனே என்றுரைக்கில்
தள்ளார்கள் உண்மைத் தவர். 31

உஞற்றுவான்-செய்பவன் மேல்நிலத்தில்-பரவெளியில்(கடவுளே)

கொல்லா விரதக் குணமே தவமாகும்
அல்லால்மற் றெல்லாம் அவமாகும்-வல்லார்
அறிவார்மற் றேனேயவர் யாருரைத்திட் டாலும்
குறியாமென் றெண்ணிக் கொளார். 32

கொல்லாவிரதம்-குறிக்கொண்டோர்நல்லோர் (தாயுமானூர்)

சங்கப் புலவர் தமதுள் இறுமாப்பைப்
பங்கப் படுத்துமொரு பாவலவன்-எங்கட்(கு)

உரைத்ததமிழ் வேதத்(து) உட்கருத்துற் றோர்ந்தார்
தரைத்தலத்திற் கொன்றருந்தா தார். 33

பாவலவன்-திருவள்ளுவர். தமிழ்வேதம்-திருக்குறள்

இரவைப் பகலாக்கி ஏந்திழையார்க் காண்மை
வரவழைக்கின் றோர்எனினும் மற்றோர்-சரவுடல்ஊன்
உண்பார்க ளாயினவர் ஊறுடையர் என்பாரே
நண்பாளர் ஆவார் நமக்கு. 34

சரஉடல்-நடமாடும்உயிர்கள் ஊறு-புலால்உண்ணும்குற்றம்

கொல்லாமை ஒன்றுபற்றிக் கோதுபல செய்கின்ற
நல்லார் அடையும் நரகத்தும்-எல்லா
விரதங் களுமுயன்றான் வேட்கையறுர் மேவும்
கரவுபடும் வீடும் கடை. 35

கோது-தவறானசெயல். வேட்கை-விருப்பம்

தெள்ளும் மறைக்கருத்தைத் தேறாது தீமகத்(து)ஊன்
கொள்ளுநரே முன் அதனைக் கோதென்ற-வள்ளுவனார்
மெய்வீட்டிற் சேர்ந்த விதம்கேட் டறியீரோ
பொய்வீடு விண்ணோர் புரம். 36

மறைக்கருத்து-அகிம்சையே புரம்-தேவுலகம் மெய்வீடு-முத்தி

நான்மறைமேற் குற்றம் நவின்றிட்டு நாய்விரும்பும்
ஊன்மகிழ்ந் துண் போரேஉலகெல்லாம்-மேன்முதலென்[று]
ஓதும்மொழி மட்டும் உமக்குக் கசப்பான(து)
ஏதுணர்ந்து சொல்மின் எனக்கு 37
மேல்முதல்-மேலானசிவகருணைநெறி. கசப்பு-வெறுப்பு

போதோ டிளம்புல் புசிக்கின்ற ஆனினத்தூ(டு)
ஏதோவொன் றென்பருந்தும் ஈனம்போல்-வாய்தோயும்
வேதத்தோ ரிற்சிலர்தாம் விண்ணவர்ஊர் வாழ்வைநம்பி
ஏதத்தூன் உண்பார்களே . 38

போது-அரும்பு ஆன்இனம்-பசுக்கூட்டம்

சாவக் கிடக்குமுயிர்த் தட்டழிவைக் காணில்மிகும்
பாவ மனிதர் பதைத்திடார்-தேவருக்கும்

மேலாய தன்மையுளார் வெந்தநெருப் பின்மெழுகு
போலாய்வர் நெஞ்சம் புலர்ந்து 39

வேதத்தோர்-வேதியர் ஏதத்துஊன்-வேள்வியில்இடும்தவறான
ஊன். சாவ-கொலையில்சிக்கியஉயிர்வதை ஆய்வர்-வருந்துவார்கள்

விண்டலத்துத் தேவருக்கும் வீறுபெற்ற சித்தருக்கும்
மண்டலத்து ளார்க்கும் மருந்தன்றே-கொண்டல்வெட்கும்
தாதாவாய் எந்தச் சமயத்தி னர்க்கும்ஒரே
ஆதாரம் ஆவான் அருள். 40

அன்றே-அசை. கொண்டல்-மேகம்ஒத்தகொடை. தாதா-ஈபவன்

பொருளுடையார்க் காக்கம் புரைதீர் புலமைத்
தெருளுடையார் தம்மையொன்றுச் சேர்த்தல்-அருளுடை
யார்க்கு
ஆக்கம் உலகத்(து) அனைத்துயிரும் தம்முயிர்போற்
காக்க முயலும் கடன் 41

ஆக்கம்-வெற்றி. தெருள்-தெளிவு

கொல்லல் விழைவார் குவலயத்தி லாதொழிய
வெல்லல் முயன்றொருவன் வென்றியுற்றால்-மல்லல்
உலகம் குறைவுபடா துள்ளபடி முன்போல்
இலகும் சிலநாளை யில். 42

வென்றி–தண்டித்துப்பெற்றசெயம் உலகம்-மக்களினம்

உலகின்கண் இற்றைவரை யுண்டாய தொண்டர்
அலகின் றியபலபே ரானார்-புலவுண்கை
நீங்கச்செய் வான்முயன்று நீடுபுகழ் தோய்ந்துவிண்ணோர்
ஏங்கச்செய் திட்டார் இலர். 43

இற்றைவரை-இந்தநாள்வரை. அலகின்றிய-கணக்கற்ற

வேடர்களும் கொல்லா விரதியர்க ளாமாறிங்(கு)
ஆடல் இயற்றும் அவன்திருத்தாள்-நாடலன்றி
மற்றையரைச் சற்றும் மதியேன்என் பாருறவை
எற்றையினும் யான்மறவே னே. 44

ஆடல்-திருவிளையாட்டு. எற்றையினும்-எக்காலத்தும்

தம்மைப் பிறர்வதைப்பச் சற்றுமிசை யார்கள்எண்ணில்
செம்மை உயிரைச் சிதைக்கின்ருர்-எம்மையினும்
ஈடேற மாட்டார்மற் றெவ்விதச்சீர் உற்ருலும்
வீடே அடையார்மெய் மெய். 45

எம்மையினும்-எந்தநாளிலும் வீடு-முத்திப்பேறு

பார்த்தன் சமர்க்களத்தில் பல்கோடி தீங்கியற்றும்
தூர்த்தர்களைக் கொல்வதஞ்சித் துக்கித்தான்-மூர்த்தி
ஒருவன் அருள் நீதி உணர்த்தினன் ஆரே
இருள்மனத்தார் ஈனம்என்பா ரே. 46

பார்த்தன்-அருச்சுனன். தூர்த்தர்-அநீதியுடையவர்
மூர்த்தி-கண்ணன்

ஊனுண்டு விற்பான் உதரத்துச் சேயொருவன்
தானுண்ணு விட்டால் தவறன்றே-மானுண்கண்
வேசி மகளொருத்தி மெய்க்கற் பினளாகில்
ஏசி மறுக்கவொண்ணு தே. 47

உதரத்து-வயிற்றில் உன்கண்-மையிட்டகண்

எந்தச் சமயத் தினரேனும் தாமருவும்
சொந்தச் சமயம் சுகமென்பார்-நந்தவொன்றைக்
கொல்லா நெறியே குணமென்று கூர்ப்புடையார்
எல்லாரும் நன்குரைப்பா ரே. 48

நந்த-இறக்கும்படி கூர்ப்பு-நுண்ணறிவு

கொன்றருந்தல் நன்மையெனக் கூறும் நெறிமுகப்பில்
நின்றவர்க்கும் சற்றுதவும் நீர்மையாற்-குன்றலின்றி
எங்கும் நிறைந்தபொருள் ஈனமுற்ற வாறுணரார்
கங்குல் பொருமனத்தார் கள். 49

நெறி-சீவகருணை. கங்குல்-இருளிரவு

வண்ணன்சொற் கஞ்சி மனையை வனத்தினிடை
எண்ணமல் விட்ட இராமன்ருன்-விண்ணுடர்
போற்றத் தவசு புரிந்தானைக் கொன்றவிதம்
எற்றமெனச் சொல்லறியேம் யாம். 50

ஏற்றமென-சிறப்புடையதென

தெய்வம் மனிதத் திருவுருவத் துற்றதென
ஐயமின்றிச் சொல்வார் அளவில்லார்-வையகத்திற்
செய்யரிய வண்மை சிலகாட்டும் சித்திநலம்
கையகத்திற் பெற்றோர் களே. 51

வண்மை-அரியதவச்சாதனை வையகத்தில்-உலகில்உறுதியாக

எல்லா வடிவும் இறைவனே என்றுணர்ந்த
நல்லாரும் கொன்றருந்தா ஞாயத்தில்-நில்லாரைப்
பொல்லார்என் றெண்ணிப் புறங்கூற லாம்அவர்தம்
வல்லாண்மைக் கில்லை வழு. 52

புறம்கூறல்-பிரித்துப்பேசுதல் வல்லாண்மை-பேராற்றல். வழு-தவறு

பொருளை மிகமதித்தார் புண்ணியங்கட் காகார்
அருளைத் தினம்விரும்பும் அன்பர்-குருளையொடு
பார்ப்பும் அருந்தும் பலர்க்காகார் என்றஇரு
தீர்ப்பும் உலகறிந்த தே. 53

குருளை-குட்டி பார்ப்பு-இளங்குஞ்சு. தீர்ப்பு-முடிந்தகருத்து

நானிலத்து மாந்தர் நலியப் படுத்துகொடும்
கோனிறுத்தும் மன்னர் கொதுகன்னார்-வானிடத்து
வாசவனும் மாலயனும் மற்றையரும் தானான
ஈசனருள் பெற்றார் எதிர். 54

நலிய-துன்புறும்படி. கொடுங்கோல்-நீதியற்றசெயல்
கொதுகு-சிறுகொசு வாசவன்-தேவேந்திரன்

அந்நாள் ஒருபேர் அருளாளன் பெற்றமகன்
மைந்நாக மன்னதிண்தோன் மன்னவரைப்-பைந்நாகக்
கோவெதிரில் தேரைக் குழுவாப் படுத்திடல்பல்
பாவெடுத்துக் கூறும் பரிந்து. 55

மகன்-பரசுராமர் மைநாகம்-ஒருமலை. நாகக்கோ-ஆதிசேடன்
படுத்திடல்-அரசர்களை அச்சுறுத்தியவீரம்

பொருளிறுமாப் பெய்திப் புரவலர்ஆ னாரும்
அருளிறுமாப் பெய்தினர்க்(கு)ஒப் பாகார்-சுருள்பனைக்கை
வெள்வேழத் தான்திருஓர் வேதமுனி சாபத்தால்
அள்வேலை யில்அமிழ்ந்த தால். 56

புரவலர்-அரசர். வெள்வேழத்தான்-வெள்ளையானையான ஐராவதம் திரு-இந்திரனுனபேரரசு வேதமுனி-வியாசர் அள்வேலை-துன்பக் கடல். தூர்வாசர் ஆகலாம் நூலிற்காண்க விவரம்-திருவிளையாடல் இந்திரன்சாபம்தீர்ந்தபடலத்திற்காண்க

எச்சமயத் தோரும் இயம்புபல நூலிடத்துப்
பொச்சமொடு மெய்யுமொன்று போல்பவே-அச்சமறுத்(து)
ஆளும் பெருமான் அடியார்க் கடிமைசெய்து
கோளும் குறியுமற்றோர்க் கு. 57

பொச்சம்-பொய்

முன்னூ லினத்தும் மொழிகின்ற நூலினத்தும்
பின்னூ லினத்தும் பிறங்குமே-எந்நூற்கும்
ஆதார மாகும் அறிவன் அருளார்கட்
சீதார விந்தச் செயல் 58

முன்னூல்-வேதம் பின்னூல்-பிற்பட்ட அருளாளர்பாடல் அறிவன்-சீத அரவிந்தம் குளிர்ந்ததாமரைஒத்த திருவடிப்பெருமை

அருளே உருவாம் அடியார் தமக்கும்
இருளே வடிவா யினர்க்கும்-தெருளும்
மருளும் கலந்த மதியாள ருக்கும்
ஒருவன் துணையாவ துண்டு. 59

அருள்-சிவகருணை இருள்-மயக்கஉணர்வு தெருள்-தெளிவு

பொருளாண்மை யுற்றுவக்கும் பூரியர்கள் ஒல்க
அருளாண்மை வேண்டும் அவர்பாற்-சுருள்கூந்தல்
நல்லார் மயற்பேயும் நல்குரவாம் செந்தழலும்
ஒல்லாது சற்றுயி னும். 60

பூரியர்-கீழ்மக்கள். ஒல்க-நாணும்படி. நல்லார்-மகளிர் நலகுரவு-வறுமை ஒல்லாது-பொருந்தாது

சித்தி யரிதென்றும் தேவர்க்கும் எய்தரிய
முத்தி யெளிதென்றும் மூடர்தாம்-பித்தியன்ற
நெஞ்சத்தார் என்ன நிகழ்த்துவார் இந்தமொழி
நஞ்சத்தோ டொப்பாம் நமக்கு. 61

சித்திஎளிது முத்திஅரிது என்பதை மாற்றிப்பேசுமவர் நஞ்சம்-விடம்

அருள்வேட்கை எய்தி அலமருவார்க் கெல்லாம்
பொருள்வேட்கை என்றுமிகப் பொல்லா(து)-இருள்வேட்
கைப்
பாவிகள்பா லுள்ளமிகப் பல்கால் பதைபதைப்ப
மேவியிரந் தேத்த விடும். 62

ஈசனருட் (பேறு) எய்தினரை ஈடில்விண் ணூர்
வாசவனும் வந்து வணங்குவான்-நேசம்வைத்து
வேண்டித் தவம்செயும்நாள் மேதினியில் மானிடரும்
கூண்டிட் டிகழ்வார் குறித்து 63

பைத்தலைய பாம்பைப் பருகும்பசிய மயில்
கைத்தலத்து முட்டையெனக் காணும்நாள்-அத்தகைய
மாசுணத்துக்(கு) ஊணும் வகையுணர வேண்டுமே
தேசுபெற நாடும் சிலர் 64

விடப்பையையுள்ள-கைத்தலத்து நேராக மாசுணம்-பாம்புக்கு
தேசுபெற திருவருட்சீர்பெறவேண்டி நாடும்-உபாசிக்கின்றவர்

மன்னர் முடிமேல் மலர்த்தாளும், வானுருவாம்
முன்னவன் பொற் றாளின் முடியுமாம்-கன்னலம்பா(கு)
அன்ன தமிழும் அருட்பேறும் அம்புவியோர்
உன்னரிதாக் கொண்டொளிர்வாற் கு. 65

முன்னவன்-கடவுள். கன்னலம்பாகு-கரும்புச்சாற்றின்பாகு
உன்னரிதா-எண்ணியறியாதபடி

கரத்திற் கடையாய்க் கடையூன் அருந்தும்
தாத்துக் கொடியார் தமக்கும்-சிரத்தைமுதல்
ஆய குணங்கள் அனைத்தினுக்கும் தூரமென்கை
தூயமுது நூலறிந்தோர் சொல் 66.

கரத்தில்- கழுதையினும் கடைஊன்-கீழானபுலால். முதுநூல்-
அறிஞர்பாடல்

கல்லார் எனினும் கருணை யுடையரெனில்
நல்லாரே நூல்முழுதும் நன்குணர்ந்த-வல்லார்கள்
மானும் மொழியினராய் வான்விரும்பி ஊன்நுகர்ந்தா
ரேனும் இழியுடையா ரே. 67

மானும்-ஒப்பான வான்-தேவருலகம்.

வான மடந்தையரை மண்ணிற் புணர்வதற்கும்
ஆன தவமுண் டதை விட்டுத்-தானழிந்த
பின்னவர்தாம் இன்பம் பெறலாம் எனநினைத்(து)ஊன்
தின்னலைப்போல் இல்லை சிரிப்பு 68

மடந்தையர்-ஊர்வசி-ரம்பை-திலோத்தமை-மேனகை

காலன்வரு முன்னருட்சீர் கைவரநா டாமல்இனி
மேலடையும் மேனிநலம் வேண்டுநரில்-தூல
உடலும் உயிரும்ஒன்றென்(று) ஓதுநரை மேலென்
றிடலாகும் என்றன் இசைவு 69

ஓதுநர்-உலகாயதர். மேனிநலம்-மறுபிறப்பின்உயர்வு

ஈசன் அருளும் இரக்கமும்ஒன்(று) என்றுணரார்
பாச வினையிற் படுமாந்தர்-நாசம்
உறலரிய மெய்ஞ்ஞானம் உற்றோர் எவரும்
அறலும் குளிர்ச்சியுமென் பார் 70

அறல்-தண்ணீரில் குளிர்ச்சிவேறுவேறல்ல

மேலுலகம் இல்லெனினும் வேண்டுநருக்(கு) ஈதல்ஒன்றே
சாலுநலம் என்னும் தமிழ்வேதம்-நாலுவகை
யோகைக்கும் முத்தி உயர்புகழ்க்கோர் வித்தாகும்
ஈகைக்கும் தாயிரக்க மே. 71

சாலும்நலம்-மிக்கநன்மை யோகம்4-சித்தயோகம்-அமிர்தயோகம் அமிர்தசித்தயோகம்-மரணயோகம் என்பனவாம். ஈகை-ஈதல். நல்லாறெளினும் கொலல்தீது என்ற குறள்

ஆராலும் காண்டற்(கு) அரியான் அருள்மலிந்து
சீரார் மழைபொழியச் செய்யானேற்-போராடும்
வேல்வேண்டும் வீரர்பலர் மேன்மேலும் மெச்சுகைச்செங்
கோல்வேந்தர் வாழ்வுநுடங் கும். 72

நுடங்கும்-தளர்ச்சிபடும்

நம்போல் ஒருமனிதன் நாதனருட் சீர்பெறலாம்
அம்போதி நீரை யருந்தினான்-செம்போதம்
உள்ளார்மற் றென்றை உணர்வினதாக் கொள்வாரோ
கள்ளார் மலர்க்குழற்றோ காய். 73

அம்போதி-கடல் செம்போதம்-நல்லுணர்வுகள். ஆர்-தேனையுடைய

பொன்னுறழ ஒன்ருகிப் பூணுறழப் பற்பலவா
மன்னும் அவனருட்சீர் வாஞ்சையினில்-துன்னுநரே
மானிடர்கள் ஆவார், மற்றையவர் எல்லோரும்
கானிடத்து வாழ்விருகங் கள். 74

உறழ-ஒப்ப. பற்பலவா-பலவகைப்பெயருடைய அணிகலன்போல கடவுள்ஒருவனே பலபெயர்வடிவம் உடையான்என்பதாம். வாஞ்சை-விருப்பம் துன்னுநர்-பொருந்தியவர் கானிடத்து-வனத்தில்

அருளே உயர்வென்(று) அறைந்தாலும் ஒப்பா
இருளாளர் வாழும் இகத்திற்-பொருள்யாதும்
வேண்டா(து) அதனை விரும்புகின்ற வித்தகரை
ஆண்டான் எனவுரைக்க லாம். 75

இருளாளர் அஞ்ஞானிகள் அதனை-அருட்பேற்றை வித்தகர்-அறிஞர்

ஐயமிட் டுண் என்(று) அ(வ்)வை உரைத்தபடி
செய்யத் துணிந்தோர் சிலர்தாமே-வையகத்தின்
முக்காலே நாலுமா முக்காணி முந்திரிமூன்(று)
எக்காலும் இல்லைஎன்போ ரே. 76

முக்காலே-என்றது தமிழ்க்கணக்கின்முறை இன்று அது மறைந்தது இன்றைய ஆங்கிலக்கணக்கின்படி தொண்ணூற்றென்பது பைசா அளவும்கூட என்க

அருவ முடன்உருவம் ஆகியமெய்த் தெய்வம்
குருவடிவே என்றுணர்ந்து கொண்டு-திருவருட்பேர்
ஆழியிடை மூழ்கும் அறிவுடைய மேலோர்கள்
வாழியெனச் சொல்லும் மறை. 77

இதுகௌமார சமயக்கருத்து. பலநூற்கருத்தும் இதுவே

எல்லாம்வல்லா னிறைவன் என்றுணர்ந்தார் போன்றசில
பொல்லார் உருவாய்ப் புகழ்வார்முன்-நில்லான்என்(று)
ஓதுகின்ருர் அந்த உணர்ச்சியவர்க் கீந்தபொருள்
யாதுகொலோ யானறிகி லேன். 78

போன்றஎன்றசொல் முழுமையாகஉணர்ந்தாரில்லை என்பதை விளக்கும்

தெய்வ நிலையும் அது செய்தொழிலின் தேர்ந்தமட்டில்
மெய்வழக்கர் பல்லோர் விளம்புவார்-சைவம்
மூதலாய பல்சமய மூர்த்திகளாய் வேறும்
அதலால்மற் றோர்துணையின் றால். 79

சமயத்தொடர்பினதாயும் வேறாயும் உள்ளது தெய்வநிலை

தான்பெற்ற சேயில் சகல வுயிரையும்எண்
ணுன்பெற்ற உண்மை அசத்தியமே-வான்பெற்ற
போது மொருபொய் புகலாதார்க் கேயருட்சீர்
மீதுவரும் தீரா விருப்பு. 80

சேயில்-சேயைப்போல. வான்பெற்ற-மேலான அருட்சீர்வந்த
போதும்கூட

கோடிக் கொருமனிதன் கோமான் அருட்டிறக்கூத்(து)
ஆடிக் கதியடைதற் (கு) ஆசிப்பான்-நாடித்
திரிவார்கள் கோடியிலோர் சீராளன் தானே
பெரிதாமப் பேறு பெறும். 81

ஆசிப்பான்-விரும்புவான். நாடி-அவ்விதப்பேறடையஎண்ணி
சீராளன்-சிறப்புடையவன்ஒருவனே

அருட்சித்தி வேண்டுகிலார் ஆரேனும் அன்னோர்
மருட்சித்தம் எய்தியபுன் மாந்தர்-தெருட்சித்தர்
தங்குழுவிற் போய்த்திரும்பும் தன்மையுடை யார் சகத்தில்
எங்கு மிகழ்ச்சியுண்பா ரே. 82

மருட்சித்தம்-மயங்கியமனம். புன்மாந்தர் தாழ்ந்தகுணத்தோர்

பத்தி யிடைமுயன்று பார்முழுதும் போற்றவருட்
சித்தி புரிந்தோரே சீரியோர்-முத்தி
அடைந்தார்கள் ஆனாலும் அன்னவர்க்கொப் பாகார்
இடைந்தார்க் குவகைநல்கா ரேல் 83

பத்தி-உபாசனைமுறை. இடைந்தார்-துன்பப்படும்சிலருக்கு

நானிலத்து மாந்தர் நகைப்ப நலம்குலைந்து
மேனிலத்துத் தேவர்கட்கும் மேவரிதாம்-நூனிகழ்த்தும்
மெய்யருட்சீர் எய்தியதா வீருப்புப் பேசுகின்றோர்
பொய்யர்கட்கெல் லாம்தலைப்பொற் பூண். 84

நூல்நிகழ்த்தும்-சாத்திர நூல்கள்கூறுகின்ற வீறுப்பு-போலிப்பேச்சு

உள்ளம் அறிய உடலா தியமூன்றும்
வள்ளலுக்கென் றீந்துவக்கும் மாதவர்பாற்-கள்ளம்
ஒருசிறிதும் சேரா(து) ஒருக்கா லுறினும்
அருளினுக்கே சாட்சி அது. 85

மூன்று-உடல்-பொருள்-உயிர் என்பன

நல்லார் பலர்க்குமுத்தி நல்கவல்ல ஞானத்தோன்
பொல்லார் குலமுழுதும் போக்கலாம்-அல்லாரும்
பாழி நெடுங்கைப் பகடூர் வழுதிமெச்சும்
காழிநகர்ச் சேயே கரி. 86

பாழி-பெரிய. பகடூஊர்-யானையைச்செலுத்துகின்ற. வழுதி-பாண்டியன். சேயே-திருஞானசம்பந்தர். கரி-சான்று

ஓர்சமையத் தோர்பால் உடையான் அருட்பெருக்கம்
சேர்சமையந் தோறுமற்றைச் சேகரத்தார்-கூர்சளத்தால்
ஆனிநினைத் தஞ்சி அலமருதல் ஆழ்கடல்சூழ்
மாநிலத்துத் தொல்லை வழக்கு. 87

உடையான்-கடவுள். சேகரத்தார்-கூட்டத்தார். ஆனி-கெடுதல். அலமருதல்-துயரப்படுவது வழக்கு-மரபு

கொல்லும் சமயம்விட்டுக் கொல்லாச் சமயமதிற்
செல்லும் அவர்க்குமுத்திச் சீருண்டாம்-நல்லுணவு
கொள்ளும் நெறியைவிட்டுக் குக்கல்உண வுண்ணும்நெறி
நள்ளுநருக்(கு) எய்தும் நரகு. 88

குக்கலஉணவு-புலால்உணவு. நள்ளுநர்-விரும்புவோர்

இத்தெய்வ மேபரமென் றெண்ணி உரைப்போர்க்கு
மெய்த்தெய்வம் ஆண்மை விளைப்பதுண்டேல்-எத்தெய்வம்
ஆவதும் ஆராயில் அந்தப் பரமமென்(று)
ஓவறச்சொல் வார்க்குதவா தோ. 89

ஆண்மை-அருட்சித்தி. ஓவற-இடைவிடாமல்

பரமே அனைத்துமெனப் பாடுகின்ற வேதத்(து)
உரமே யுரமென் றுணர்ந்து-சிரமீது
மெய்யடியார் பொற்றாள் விரையரப் பெற்றோரே
வையமிக வாழநினை வார் 90

உரமே-வலிமையே.விரை மணம்.ஆர-அமையுப்படி.வையம்-உலகம்

எந்த நிலைவிட் டிழிந்தாலும் ஈசனருள்
வந்தடைய வேண்டுமென வாஞ்சிக்கும்-அந்த
நிலைதவற ஒண்ணாது நிச்சயமாச் சொல்வேன்
அலையொழிய வேண்டும் அகம். 91

வாஞ்சிக்கும்-விரும்புகின்ற. அலை-ஓயாதமனக்கவலை வேண்டும்-
எண்ணக்கூடிய அகம்-மனமுடையவர்கட்கு

குறியைக் குறித்தாற் குறியிறந்த ஞான
நெறியிடைபோய்ச் சித்தம் நிலைக்கும்-அறியாமை
முற்றியவர் அந்நிலையை முன்பற்ற வேண்டுமிருட்
பெற்றியினாற் றேய்வார் பிழை. 92

குறி-தியானிக்கின்றவடிவம். குறியிறந்த-தான்வேறுதலைவன் வேறு
என்றநிலையற்ற-(ஒன்றுபட்ட) அந்நிலையை-உருவபாவனையை,
இருட்பெற்றியினாற்-அருவநாட்டம்உடையவர்.

எவ்வுருவத் தேனும் இதயம் மிகநாடில்
அவ்வுருவம் கைக்கொண் டவிருமே-வெளவுநெறி
அத்தனைக்கும் ஆதாரமாய் ஆராலும் காண்பரிய
சித்தனென நின்ற செயல். 93

அவ்வுருவம்-எண்ணியதிருவுருவம். வவ்வும்நெறி-விரும்புகின்ற
கடவுள்நிலை சித்தன்என கடவுள்வடிவில் காணும் நிலைமை.

வல்லான் அருட்பெருஞ்சீர் வாஞ்சித்த மாதவரைப்
பொல்லா வினைக்கொடும்பேய் புண்படுத்தும்-அல்லாதவர்
பாடாணத் துற்ற பழைய புழுவினம்போல்
வாடாது வாழ்வார் மகிழ்ந்து 94

பாடாணத்து-விடத்தில்பிறந்த வினையினால் வருந்தாமல்வாழ்வார்
என்றதால் அறியாமையால் துயரத்தையே இன்பமாகக் கொள்வர்
என்பதாம்.

தற்பரத்தை நாடித் தவம்புரியும் தக்கோருக்(கு)
அற்பர் உறவுசற்றும் ஆகாதே சொற்பனத்தும்
எல்லாம் அதன்செயல்என் றெண்ணி இறுமாக்கும்
வல்லாண்மை யைக்குறுக்கு வார் 95

அற்பர்-உலகநெறியிற்சுழல்பவர். குறுக்குவார்-ஆர்வத்தைக்
குறையச்செய்வார்கள். நினைப்பாரைச்சேர்ந்து. நினையாரைநீங்கி.
என்பதாலறிக

உயிரொன் றுடலொன்(று) உலப்பில்பர பொன்றென்(று)
அயிரொன் றுணர்வால் அறியார்-செயிரொன்று
தத்துவங்கள் ஆய்ந்து தயங்குவார் அன்னவர்தம்
பித்துநமக் காகாப் பிழை 96

ஜக ஜீவ-பரம் என்பனவடசொல் செயிர்-துன்பம். அயிர்-நுண்மை

ஒன்றென் றிரண்டேன் றுரைசெய்வார் ஒன்றிரண்டும்
அன்றென்று சில்லோர் அறைகுவார்-என்றென்றும்
கள்ளமறப் போற்றுநர்க்குக் காணரிய மெய்யருட்பே(று)
உள்ளபடி தானே உறும். 97

மங்கலம் இல்லா மகளும் மழலைமொழிச்
செங்கனிவாய்ச் சேய்நலமில் சீர்வீடும்-பொங்கருட்பே(று)
எற்றுவக்கைக் கானதவம் இல்லாத் துறவோனும்
சாற்றுகைக்கொன் றாகும் தரம். 98

மகள்-கைமையினள்

கல்விக் கடலைக் கடந்து களிகூரும்
நல்விற் பனர்க்குதிக்கும் ஞானத்தைப்-பல்விதத்தும்
ஆராய்ந் தறியின் அழியாப் பிரானருட்செஞ்
சீராகும் யாவும்என்ப தே. 99

கடல்-அளவற்றது. கடத்தல்-மற்றொருபுலவனைக்காணும்போது
அழுக்காறுகொள்ளாமைஎன்பது ஆசிரியர்கருத்து

மெய்யேமெய் யாகி விரிகடல்சூழ் மேதினியிற்
பொய்யேபொய் யாகப் புகல்வார்க்கு-மையேழும்
சிந்தா மணியுமிரு செந்நிதியும் தேனுவும்வெண்
தந்தா வளமும் சளம். 100

மையேழும்-எழுவகையானமேகங்களும்.இருசெந்நிதி-சங்கநிதி-பது
மநிதிஎன்பன தந்தாவளம்-இந்திரபோகம்-தந்தாவனம்-
ஐராவதயானை

செம்பனைய தாமுலகோர் செல்வம் திரண்டவெள்ளித்
தம்ப முறமும் தமிழ்க்கல்வி-அம்பரத்தில்
ஓங்கும் கனகவரை ஒப்பாம் உயர்பிரமம்
ஆங்குரவ ணர்கண் அருள். 101

உலகப்பொருள் தாம்பிரமமும், தமிழ்க்கல்வி-வெள்ளித்தூணும், வானில்வளர்ந்தபொன் மலையைப்போல்வது, பரம்பொருள்வடிவானசற்குருநாதர் திருக்கடைக்கண்ணும்ஆகும்

பரிதி சிவன்உமைபால் பாழி நெடுங்கைக்
கரிமுகன்சே யென்னக் கழறும்-பெரியநெறி
ஆறும் சுவைதீர்ந்த ஆதீதமும்நன் ருகுமெனக்
கூறுநரே நந்தம் குரு. 102

பாழி-பெரிய எழுசமயம்

சில்தேயம் சுற்றித் திரிந்தாலும் செந்தமிழாற்
பல்தேவும் போற்றிப் பணிந்தாலும்-கல்தேடும்
சித்தருக்கும் மேலாய சீர்படையார் சிந்தையருள்
வைத்தவர்க்குத் தானே வரும். 103

கல்தேடும் மலைக்குகையைவிரும்புகின்ற. அருள்-சிவகருணைநெறி

வத்து நிலையுணர்ந்து வாயாற் பிதற்றுநர்க்குச்
சித்து விளக்கம் திகழாதே-முத்துறழும்
நெஞ்சால் வடிவமொன்றை நித்தமும் சிந்திப்பவருக்(கு)
எஞ்சாமல் உண்டாகுமே. 104

வத்து-தெய்வநிலை முத்து-வெண்மையான (கபடமற்ற)
எஞ்சாமல்-குறைவுபடாமல்

காமத்தும் பொல்லாக் கலியாற் கயங்குநர்க்கும்
நேமத் தினுக்கும் நெடுந்தூரம்-தாமருளை
நாடி முயல்கை நடுத்தோன் றிடுமாகில்
வாடிவிட மாட்டார் மருண்டு. 105

கலி-வறுமை கயங்குநர்-வருந்துவோர்

எந்தத் துயரினத்தும் ஈனரிடம் போயிரக்கும்
அந்தத் துயரே அதிகோரம்-சந்தக்
கவியினையும் மிக்கிகழ்ந்து காஞ்சினத்தைப் போற்றி
அவியுறுவார் கூட்டமிக லால். 106

காஞ்சனம்-பொன்-(பொருள்) அவியுறுவார்-துன்பப்படுவார்கள்

நல்லார் மிடிப்படவும் நாயனையார் இன்புறவும்
வல்லான்செய் கின்ற வழக்கெண்ணி-எல்லாரும்

ஒன்றுபோல் தீமை உஞற்ருர்ஈ துண்மைஎன்கை
என்றுமுல கிற்றுலங்கு மே. 107

மிடி-வறுமை உஞற்றல்-செய்தல்

பார்ப்பார் இரப்பார் படைமன்னர் தண்டிப்போர்
கூர்ப்பார் மதிவணிகர் கொண்டுவிற்போர்-ஏர்ப்பாலர்
தாமே மழைவகுத்தோன் தன்னருளாற் சந்ததமும்
பூமேல் உணவுவிளைப் போர். 108

கூர்ப்பு-நுட்பம். ஏர்ப்பாலர்-வேளாளர்

இன்ன செயலரிதாம் என்றிசைத்தற் கெட்டாத
முன்னவன்றன் மெய்யருளை முன்னுவார்க்(கு)-இன்னல்
பலவுண்டாம் ஆனுலும் பார்த்திருக்கும் போதே
அலகின் றிய நலமுண் டாம். 109

அலகின்றிய-அளவுபடாத

வாதவூ ரானை வழுதிவைகை ஆற்றினிடை
மோதலுறும் நாளில் மூதுலகோர்-ஏதம்
பகர்ந்திகழ்ந்து ம்அன்னவனுட் பத்திகெட வில்லை
நிகழ்ந்ததுமே லுள்ள நிசம். 110

ஏதம்-ஆசுநிதியைத்திருப்பணிசெய்தார்என்பது
நிசம்-வாவூரடிகளின் அன்புத்திறம்.

பத்தி புரிந்துய்ந்தோர் பாருலகிற் பற்பலர்உண்(டு)
அந்திருக்கூட் டத்துள்எவர் ஆனுலும்-மெய்த்திறல்சேர்
நாவிற் கரசனென நைந்திலர்,பின் ஞளிலும்ஓர்
மாவிற் றிகழ்ந்தான் வரன் 111

நைந்திலர்-துன்பப்படவில்லை, மாவில்-குதிரையின் மீது.
வரன்-சிவபிரான்.

சண்பை நகரில் தமிழ்விரகன் போல்தவத்தின்
பண்பறியு முன்பே பரன்வந்து-விண்புரப்பார்
தங்களுக்கும் எய்தாத் தனியாண்மை நல்கலுற்ருர்
எங்கள் உலகத்(து) இலை 112

சண்பை-சீகாழிப்பதி முன்பு-இளவயதில்

தானே பரமன் தடுத்தாண்ட சுந்தரனும்
மானேர்உண் கண்ணார் மயக்கத்தால்-ஏனேன்என் று)
எல்லவரும் கேட்பவிழி யின்றியலைந் தான் என்றால்
அல்லலுறு துய்குநர்இங் கார் 113

உண்கண்-மையிட்டவிழி. அல்லல்-அருட்சோதனை

தண்ணார் குருகைச் சடகோபன் தாமரைப்பூங்
கண்ணன் அருட்பெருக்கம் கண்டாற்போல்-மண்ணாட்டின்
மற்று மவனை வணங்கினரும் கண்டார் என்(று)
எற்றுநரும் பற்பலர்உண் டே 114

எற்றுநர்-ஏமாற்றுவோர்.

பூங்கமலக் கண்ணன்அன்பர் போற்றும் புகழ்முனிவன
ஆங்கவரைக் காப்பதெண்ணி ஐயகோ-வேங்கடத்திற்
பொல்லாக் கவுமாரர் போர்விளையு மாறுசெய்தான்
எல்லாரும் சொல்வ திது. 115

பொல்லாக்கவுமாரர்-துணிவுற்றமுருகனன்பர் முனிவன்-இராமாநு
சர்.திருமால்கலமாகும்படி. போர்-முருகன்தலமென்றுவாதிடும்படி

சைவம் முதலாகச் சாற்றுகின்ற சட்சமயத்(து)
ஐவகையும் ஒன்றாயும் அஞ்சாமல்-மெய்வலியால்
வீர வயிணவன்றான் மேதினியில் வாழ்கின்றான்
யாரறியார் இந்த இசை 116

சட்சமயம்-ஆறுசமயங்கள். வயிணம்தனிப்பட்டு முத்திவகையில்
வேறுப்பட்டகருத்து-மற்றவைஒன்றுபட்டவை

கன்றை எடுத்துக் கனிமீ தெறிந்தொருக்காற்
குன்றைப் பிடித்தகோமான் தொண்(டு)-ஒன்றை
இரண்டாக்கும் ஏழைமையோர் இங்குமங்கும் அன்னோன்
சரண்டான் அளந்ததெண்ணா தார் 117

இரண்டாக்கல்-வடகலை தென்கலை என்பது. இங்கும் அங்கும்-
இரண்டிடத்தும் பூமியிலும் விண்ணிடத்தும். ஏழைமை-திடமற்ற
மனத்தினர்

மங்கலநூல் பூட்டும் மனையிடத்தும் வாழ்விழந்திட்(டு)
அங்கதனைக் கொய்யும் அகத்திடத்தும்-அங்கண்

உலகத்தார் போற்றொருவன் உண்டே, அவன்தான்
மலரிற்போம் மேலோர் மனம். 118

ஒருவன்-விநாயகப்பெருமான்.

மாறு படாத மறைநூல் வகுத்தநெறி
ஆறும் ஒருகுரவன் ஆனனமாத்-தேறுநரை
யாவர் பகைப்பார், எவரை அவரிகழ்வார்
பூவலயத் தன்னர் பொது. 119.

ஆனனம்-திருமுகம். குரவன்-குருவாவரும் குமரப்பிரான்.

கண்ணறியத் தோன்றும் கதிரே கடவுளென்னும்
எண்ணம் இலாதார் எவரேனும்-மண்ணதனிற்
சின்னாள் விளக்கமுற்றுத் தீயரெனும் பேர்பொறுத்திட்(டு)
ஒன்னரால் மாய்வார் ஒருங்கு. 120

விளக்கம்-பலராற்புகழப்பெறுதல். ஒன்னர்-பகைவர்.

மாயைஅருட் சத்தி,யென வல்லோர் வகுக்குமொரு
தாயை இகழும் சழக்கர்தாம்-தீயை
அறலைத் தணந்திட் டடிசில் அமைக்கும்
திறல்விழைவார் போலும் சிலர். 121

அறல்-தண்ணீர் அடிசில்-சோறு

அன்னமென்பான் தன்பால் அமுதென்பான் வாதமிட்டுப்
பின்னவிதம் பேசுமொரு பெற்றியொப்பம்-இன்னதுதான்
என்றெய்வம் என்பாற் கிதுதெய்வ மாம்அதுவே
அன்றென் றுரைப்பான் அகம் 122

பின்னவிதம்-பெயரில்உள்ளவேறுபாடு.

யான்தெய்வம் ஆம்என் றியம்பி இறுமாப்போன்
தான்தெய்வம் என்றிடலும் தன்மமே-வான்தெய்வம்
உண்டென் பவர்க்(கு)உறவாய் ஊறொழித்தின் றென்பவ
(ரைக்
கண்டெங்கும் வெல்லல் கடன் 1 3

தன்மமே-சரியே. ஊறுஒழித்து-துன்பைமாற்றி. இன்றுஎன்பவரை—தெய்வமஇல்லைஎன்பவரை வெல்லல்-கடவுள்உண்டென்பதை நிறுவுதல்

குழவி உருவாய்க் குவலயத்தில் வந்த
பழமை யறியாத பலரும்-தழலிற்
கொடியதாய்ப் புனலிற் குளிர்ந்ததெய்வம் தாமென்(று)
இடியே(று)ஒத் தார்ப்ப திழிவு. 124

தெய்வம்தான்என்று-தானேகடவுள்என்று- பிரமம்தான்என்பதாக இடியேறு-உரத்திப்பேசுதல். ஆர்ப்பது-ஆரவாரிப்பது.

எத்தேயத்(து) எச்சமயத்(து) யாவரருள் பெற்றாலும்
மெய்த்தேவு அருட்செயலில் வேறல்ல-பொய்த்தே
வொன்(று)
இங்குவகுத் தாலும் இருக்கைக் கிடமில்லை
எங்கும் நிறைந்தததுவே. 125

மெய்த்தேவு-எல்லாச்சமயத்துக்கும் பொதுவான பரம்பொருள் ஒன்று

ஏயநெடு நாட்சென்(று) யாதேனும் ஓர்சமயம்
மாய உலகினிடை வந்தாலும்-தூயமறை
சொல்லுநெறி ஆறின் தொடர்பாய் முடியுமன்றி
ஒல்லும்வகை யில்லைமற்றொன் று. 126

வந்தாலும்-புதியசமயம். ஒல்லும்வகை-பொருத்தமாக.

சங்கரப்பேர் மாமுனிவன் சட்சமயத் தோர்களும் தம்
புங்கவன்என் றேத்தப் பொதுவானான்-அங்கதுகண்(டு)
உள்ளாரும் கேட்டவரும் ஒன்றைஒப்பி மற்றவற்றை
எள்ளாமை யுற்றவிதம் என்? 127

சட்சமயம்-ஆறுசமயம். புங்கவன்-குரு.

சக்கரைவட் டன்ன சமயங்கள் ஆறில்ஒன்றை
மிக்கதெனப் பற்பலர்சொல் மேதினியில்-ஒக்கநலம்
என்றேத்து வார்க்கிகழ்ச்சி ஈய்தா(து) இராதெனினும்
வென்றேகம் தீர்தரலாமே 128

சக்கரைவட்டு-சக்கரைக்கட்டி. அதுஎப்பக்கம்உண்டாலும் இனிக்கும். மிக்கதென-தன்னதென்றுஒவ்வொருவரும்-ஒவ்வொன் றைக் கொள்வதால்.

ஆறு நெறியுமெய்மை யாமெனலும், அன்றெனலும்
கூறும்விதம் ஏழாய்க் குலாவுமே- வேறுவழி
காட்டுவான் உண்டாயிற் காசினியோர் வாரமெனக்
கூட்டு தினமும்எட்டா கும் 129

ஆறுசமயமும்-அதீதம்என்றும்ஏழுஆகும். அதுபோலக் கிழமையும்ஏழு இதன்றிஎட்டாக ஒன்றைஒருவன் காட்டினல், கிழமையும் எட்டா. கும் எனவே இல்லைஎன்பதாம்.

மாதமுதல் வெவ்வேறு வைத்துக்கொண் டார்சிலரும்
ஆதவன்நாள் தொட்டெழுநாள் ஆகவே-ஓதலிடை
மாறுபட்டார் இல்லை. இது மண்ணுலகும் விண்ணுலகும்
கூறுமிறை காட்டும் குறி. 130

ஆதவன்நாள்-சூரியன்கிழமை (ஞாயிறு). இறை-தெய்வநிலை.

வாயால் அருந்தல், மகளிர் மகப்பெறுதல்,
நோயாதி யாலிறத்தல் நூலினத்தின்-தாயாம்
குரவற் பழிச்சலன்ன கொள்கைகளில் ஒத்தார்
அரவத்தும் தீயமதத் தார். 131

பரச்சல்-போற்றுதல். ஒத்தார்-ஒப்புடையவராவர். அரவத்தும்-பாம்பைவிட புறச்சமயிகள்.

ஆண்டான் வகுக்கும் அவையவத்துள் ளோர்சிறிதும்
வேண்டாம்என் றெள்ளும் வெறுஞ்சமயம்-பூண்டாரும்
வாழுலகில் எந்த வகைநிறுவக் கூடாதோ
வாழும் அறிவுள்ள வர். 132

அவையவம்-ஆண்குறி. வேண்டாம்-தோல்செய்தல்
வெறும்சமயம்-போலிச்சமயம். வகை-எதைச்சொன்னலும்
நடக்கும்.

பல்கோடி யாமுலகும் பன்னூலும் பல்லுயிரும்
நல்கோகை யாதியாம் நற்குணமும்-கொல்கோரம்
இல்லாத மாதவமும் யாவர் எடுத்தோதும்
எல்லாமும் ஈசனரு ளே. 133

---

## முத்துவிழா நாயகரின் முக்கிய நூல்கள்.

---

★ திருவாமாத்தூர் முத்தாம்பிகையம்மன் பிள்ளைத்தமிழ்

★ ,, வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள்பிள்ளைத்தமிழ்

★ மணவாளநல்லூர் கொளஞ்சியப்பர் பிள்ளைத்தமிழ்

★ வடபழனியாண்டவர் பிள்ளைத்தமிழ்

★ சிரவை இராமானந்தசுவாமிகள் நெஞ்சுவிடுதூது

★ ,, ,, கிளிக்கண்ணி

★ மத்வாச்சாரியவைபவம்

★ பக்தமான்ய அரங்கேற்றல் வைபம்

மற்றும் பற்பல பதிகங்கள்.

---